உ

சிவமயம்.

கணபதி துணை.

கயத்தூர்ப்

பெருவாயின் முள்ளியாசிரியர்

அருளிச் செய்த

# ஆசாரக்கோவை.

முதற் பிரசுரம்.

சித்திவிநாயக வித்தியாசாலை.

பலவான்குடி

மு. மு. வீர.

வீரப்பசெட்டியார் அவர்கள்

பொருளுதவியால்

கோநகர்,

தனவைசியன் அச்சியந்திரசாலையில் பதிப்பிக்கப்பெற்றது.

நள-ஞு ஆவணி-மீ

1916.

சிவமயம்.

சண்முகநாதன் றுணை,

# முகவுரை.

செந்தமிழ் வளர்க்குஞ் செல்வமிக்குடையீர்!

மால்வரை புரையு மாடக்கூடல் ஆலவாயி னமர்ந்தினி தருளும் பாண்மதி மிலைந்த பசுபதியருளால் பக்கமிக் காட்சிச்சங்கப் புலவர்களியற்றிய பதினெண் *கீழ்க்கணக்கு ளொன்றாகிய இவ்வாசாரக்கோவை வெளியாரின் சங்கநூல்க ளிறவாது வெளி வருதற்கும் வித்தியாசாலையிற் பயிலும் மாணவர்களும் பிறரும் ஆசாரங்களை யறிந்தொழுகுவதற் கும் சாதகமாகுமென அறிஞருரைத்தமையே மேற்கொண்டு சித்திரியக வித்தியாசாலையின் முதற்பிரசுரமாக இவ்வூர் சுக்ஷபிமானியாகிய ஸ்ரீமாந் மு. மு. வீர. வீரப்ப செட்டியாரவர்களின் பேருதவியால் பதிப்பிக்கப் பெற்றது. இப்புத்தகம் மாணவர்களுக்கு விலையின்றிக் கொடுக்

---

* "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
இந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலையோ டாங்கீழ்க் கணக்கு." இவ்வெண்பாவாற் பதினெண் கீழ்க்கணக்குகளையறிக.

சப் பெறும். இம்முறையை யேனையோருங் கைப்பற்றுமாறு எல்லாம் வல்ல இறைவன் றிருவருள் புரிக.

இங்ஙனம்

சித்திவிநாயக வித்தியாசாலை,
பலவான்குடி.
5—9—1916-

மணிவாசக சங்கத்தார்.

இப்புத்தகத்தை விலையின்றி அடியிற் கண்டவரிடம் பெற்றுக்கொள்ளலாம். அயலூர் வாசிகள் தபாற்செலவுக்குப் பிரதியொன்றுக்கு அரையணா ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக் கொள்ளவேண்டும்.

புத்தகங்கிடைக்குமிடம்.
மானேஜர் மணிவாசக சங்கம்,
பலவான்குடி, இராமநாதபுரம் ஜில்லா,

கயத்தூர்ப்

பெருவாயின் முள்ளியாசிரியர்

அருளிச் செய்த

# ஆசாரக்கோவை.

தற்சிறப்புப்பாயிரம்.

ஆரெயின் மூன்று மழித்தா னடியேத்தி
யாரிடத்துத் தானறிந்த மாத்திரையா னாசாரம்
* யாரு மறிய வறனாய மற்றவற்றை
யாசாரக் கோவை யெனத்தொகுத்தான் றீராத்
திருவாயி லாய திறல் † வண் கயத்தூர்ப்
பெருவாயின் முள்ளியென் பான்.

நூல்.

நன்றி யறிதல் பொறையுடைமை யின்சொலோ
டின்னாத வெவ்வுயிர்க்குஞ் செய்யாமை கல்வியோ
டொப்புர வாற்ற வறித லறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்ட லிவையெட்டுஞ்
சொல்லிய வாசார வித்து. ௧

பிறப்பு நெடுவாழ்க்கை செல்வம் வனப்பு
நிலக்கிழமை மீக்கூற்றங் கல்விநோ யின்மை
யிலக்கணத்தா லிவ்வெட்டு மெய்துப வென்று
மொழுக்கம் பிழையா தவர். ௨

* ஆருமறிவதறனாக எனவும் பாடம்.
† வெண்கயத்தூர் எனவும் பாடம்.

தக்கிணை வேள்வி தவங்கல்வி யிந்நான்கு
முப்பா லொழுக்கினாற் காத்துய்க்க வுய்க்காக்கா
லெப்பாலு மாகா கெடும்.

வைகறை யாமந் துயிலெழுந்து தான்செய்யு
நல்லறமு மொண்பொருளுஞ் சிந்தித்து வாய்வதிற்
றந்தையுந் தாயுந் தொழுதெழுக வென்பதே
முந்தையோர் கண்ட முறை. ௪

எச்சிலார் தீண்டார் பசுப்பார்ப்பார் தீத்தேவ
ருச்சந் தலையோ டிவையென்ப யாவருந்
திட்பத்தாற் றீண்டாப் பொருள். ௫

எச்சிலார் நோக்கார் புலைதிங்க ணாயிறுநா
யத்தக வீழ்மீனோ டிவ்வைந்துந் தெற்றென
நன்கறிவார் நாளும் விரைந்து. ௬

எச்சில் பலவு முளமற் றவற்று
ளியக்க மிரண்டு மிணைவிழைச்சு வாயில்
விழைச்சிவை யெச்சிலிந் நான்கு. ௭

நால்வகை யெச்சிலு நன்கு கடைப்பிடித்
தோதா ருரையார் வளராரே யெஞ்ஞான்று
மேதைக ளாகுறு வார். ௮

நாளந்தி கோறின்று கண்கழீஇத் தெய்வத்தைத்
தானறியு மாற்றாற் றொழுதெழுக வல்கந்தி
நின்று தொழுதல் பழி. ௯

அரச னுவாத்தியான் றாய்தந்தை தம்மு
னிகரில் குரவரிவ ரிவரைத்
தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே
யாவருங் கண்ட நெறி. ௧௬

குரவ ருரையிகந்து செய்யார் விரதங்
குறையுடையார் தீர மறவார் நிறையுவா
மேற்கோளுந் தினனார் மரங்குறையா ரென்பதே
நல்லறி வாளர் துணிவு. ௧௭

நீராடிக் கால்கழுவி வாய்பூசி மண்டலஞ்செய்
துண்டாரே யுண்டா ரெனப்படுவா ரல்லாதா
ருண்டார்போல் வாய்பூசிச் செல்வ ரதுவெடுத்துக்
கொண்டா ரரக்கர் குறித்து. ௧௮

காலினீர் நீங்காமை யுண்டிடுக பள்ளியு
மீரம் புலராமை யேறற்க வென்பதே
பேரறி வாளர் துணிவு. ௧௯

உண்ணுங்கா லோக்குந் திசைகிழக்குக் கண்ணமர்ந்து
தூங்கான் றுளங்காமை நன்கிரீஇ யாண்டும்
பிறிதியாது நோக்கா னுரையான் றொழுதுகொண்
டுண்க வுகாஅமை நன்கு. ௨௰

விருந்தினர் மூத்தோர் பசுச்சிறை பிள்ளை
யிவர்க்கூண் கொடுத்தல்லா லுண்ணாரே யென்று
மொழுக்கம் பிழையா தவர். ௨௧

ஒழிந்த திசையும் வழிமுறையா னல்ல
முகட்டு வழியூண் புகழ்ந்தா ரிகழ்ந்தார்
முகட்டு வழிகட்டிற் பாடு. உ௨

கிடந்துண்ணார் நின்றுண்ணார் வெள்ளிடையு முண்ணார்
சிறந்து மிகவுண்ணார் கட்டிலின்மே லுண்ணா
ரிறந்தொன்றுந் தின்னார்க ணின்று உ௩

முன்றுவ்வார் முன்னெழார் * மீக்கூறார் சேணிங்க
ளொன்பெரிது மாற்ற வலியரார் தம்மிற்
பெரியார் † தமரிருந்தக் கால் உ௪

கைப்பன வெல்லாங் கடைதலை தித்திப்ப
மெச்சும வகையா லொழிந்த விடையாகத்
துய்க்க முறைவகையா லூண். உ௫

முதியவரைப் பக்கத்து வையார் விதிமுறையா
லுண்பவற்று ளெல்லாஞ் சிறிய கடைப்பிடித்
தன்பிற் பிரியாமை யாசார நீங்காமை
பண்பினா னீக்கல கலம் உ௬

இழியாமை நன்குமிழ்ந் தெச்சி லறவா
யடியோடு நன்கு துடைத்து வடிவுடைத்தா
முக்காற் குடித்துத் துடைத்து முகத்துறுப்
பொத்த வகையால் விரலுறுத்தி வாய்பூசன்
மிக்கவர் கண்ட நெறி. உ௭

* மிக்குறார் எனவும் பாடம்.
† தம்பாலிருந்தக்கால் எனவும் பாடம்.

இருகையாற் றண்ணீர் பருகா ரொருகையாற்
கொள்ளார் கொடா ரதுர் குரவர்க் கிருகை
சொறியா ருடம்பு மடுத்து. ௨௫

அந்திப் பொழுது கிடவார் நடவாரே
யுண்ணார் வெகுளார் விளக்கிகழார் முன்னந்தி
யல்குண் டடங்கல் வழி. ௨௬

கிடக்குங்காற் கைகூப்பித் தெய்வந் தொழுது
வடக்கொடு கோணந் தலைசெய்யார் மீக்கோ
ளுடற்கொடுத்துச் சேர்தல் வழி. ௩௰

இருதேவர் பார்ப்பா ரிடைப் போகார் தும்மினு
மிக்கார் வழுத்திற் றொழுதெழுக வொப்பார்க்
குடன்செல்ல லுள்ள முவந்து ௩௧

புற்பைங்கூழ் பூப்பி சுடலை வழி தீர்த்தந்
தேவ குலநிழ லானிலை வெண்பலியென்
றீரைந்தின் கண்ணு முமிழ்வோ டிருபுலனுஞ்
சோரா ருணர்வுடை யார். ௩௨

பகற்றெற்கு நோக்கா ரிராவடக்கு நோக்கார்
பகற்பெய்யார் தீயினு ணீர். ௩௩

பத்துத் திசையு மனத்தான் மறைத்தபி
னந்தரத் தல்லா லுமிழ்வோ டிருபுலனு
மிந்திர தானம் பெறினு மிகழாரே
தந்திரத்து வாழ்துமென் பார். ௩௪

நடைவரவு நீரகத் து நின்றுவாய்ப் பூசார்
வழிநிலை நீருளும் பூசார் மனத்தால்
வரைந்துகொண் டல்லது பூசார் கலத்தினாற்
பெய்பூச்சுச் சீரா தெனின். ௧௫

சுடரிடைப் போகா ரவர்மே லுமியா
ரிடரெனினு மாசுணிந்து மேற்கொள்ளார்
படைவரினு மாடை வளிபுடைப்பப் போகார்
பலரிடை யாடை யுதிரா ரெனாருங்
கடனறி காட்சி யவர். ௧௬

பிறர்மனை கட்களவு சூது கொலையோ
டறனறிந்தா ரிவ்வைந்து நோக்கார் திறனிலரென்
றெள்ளப் படுவதூஉ மன்றி நிரயத்துச்
செல்வழி யுய்த்திடு தலால். ௧௭

பொய்குறளை வெளவ லழுக்கா றிவைநான்கு
மையந்தீர் காட்சியார் சிந்தியார் சிந்திப்பி
னையம் புகுவித் தருநிரயத் துய்த்திடுந்
தெய்வமுஞ் செற்று விடும். ௧௮

தமக்கென் றுலையேற்றார் தம்பொருட் * டூன் கொள்ளா
ரடுக்களை யெச்சிற் படாஅர் மனைப்பலி
யூட்டினமை கண்டுண்க வூண். ௧௯

உயர்ந்ததின் மேலிரா ருள்ளழிவு செய்யா
ரிறந்தினனு செய்தக் கடைத்துங் குரவ
ரிளங்கிளைஞ ருண்ணு மிடத்து. ௨௰

* ஊன் கொல்லார் எனவும் பாடம்.

கண்ணெச்சில் கண்ணூட்டார் காலொடு காறேயார்
புண்ணிய மாய தலையா றெப்புறுத்த
நுண்ணரிய நூலறிவி னார். சுக

தீண்டாநாண் முந்நாளு நோக்கார்நீ ராடியபி
னீராறு நாளு மிகவற்க வென்பதே
பேரறி வாளர் துணிவு. சுஉ

உச்சியம் போழ்தோ டிடையாம மீரந்தி
மிக்க விருதேவர் நாளோ டுவாத்திதிநா
ளட்டமியு மேனைப் பிறந்தநா ளிவ்வனைத்து
மொட்டா ருடனுறைவின் கண். சுங

நாழி மணைமே லிரியார் மனைகவிழார்
கோடி கடையுள் விரியார் கடைத்தலை
யோராது கட்டிற் படாஅ ரறியாதார்
தந்தலைக்க ணில்லா விடல். சுச

துடைப்பந் துகட்காடு புல்லிதழ்ச் செத்தற்
கருங்கலங் கட்டில் கிழிந்ததனோ டோடும்
பரப்புக பந்த ரகத்து. சுரு

காட்டுக் களைந்து கலங்கழீஇ யில்லத்தை
யாப்பினீ ரெங்குந் தெளித்துச் சிறுகாலை
நீர்ச்சால் கரக நிறைய மலரணிந்
தில்லம் பொலிய வடுப்பினுட் டீப்பெய்க
நல்ல துறல்வேண்டு வார். சுசு

அட்டமி மேனை யுவாவும் பதினான்கு
மப்பூமி காப்பார்க் குறுகண் ணுறுமிக்க
நிலத்துளக்கு விண்ணதிர்ப்பு வாலாமை பார்ப்பா
ரிலங்குநூ லோதாத நாள். ச௭

கல்யாணந் தேவர் பிதிர்விழா வேள்வியென்
றைவகை காலு மிகழா தறஞ்செய்க
வெய்க விருத்தியுங் கூழ். ச௮

உடைநடை சொற்செவ்வி வைதலிந் நான்கு
நிலைமைக்குங் கல்விக்கு மாண்மைக்குந் தத்தங்
குடிமைக்குந் தக்க செயல். ச௯

பழியா ரிழியார் பலருள் ளுறங்கா
ரிசையாத நேர்ந்து கரவா ரிசைவின்றி
யில்லாரை யெள்ளி யிகழ்ந்துரையார் தள்ளியுந்
தாங்கருங் கேள்வி யவர். ரு0

மின்னொளியும் வீழ்மீனும் வேசையர்கள் கோலமுந்
தம்மொளி வேண்டுவோர் நோக்கார் பகற்கிழவோன்
முன்னொளியும் பின்னொளியு மற்று. ரு௧

படிறும் பயனிலவும் * பட்டி யுரையும்
வசையும் புறனு முரையாரே யென்று
மசையாத வுள்ளத் தவர். ரு௨

தெறியொடு கல்லெறிதல் விளிவிளியே
விகிர்தங் கதங்கரத்தல் கைபுடை தோன்ற
வுறுப்புச் செகுத்தலோ டின்னவை யெல்லாம்
பயிற்றார் நெறிப்பட் டவர். ரு௩

* பட்டியுரையும் வசையும் எனவும் பாடம்.

முறுவ லினிதுரை கானீர் மணைபாய்
கிடக்கையோ டிவ்வைந்து மென்ப தலைச்சென்றார்க்
கூணொடு செய்யுஞ் சிறப்பு ௫௪

கறுத்த பகைமுனையுங் கள்ளாட்டுக் கண்ணு
நிறுத்த மனமில்லார் சேரி யகத்துங்
குலாநோக்கிக் கொண்டவர் கோள்விட் டுழியு
மிகரி லறிவினார் வேண்டார் பலர்தொகு
நிர்க்கரையு நீடு நிலை. ௫௫

முளிபுல்லுங் கானமுஞ் சேரார் தீக் கூட்டார்
துளிவிழக் கால்பரப்பி யோடார் தெளிவிலாக்
கானந் தமியரியங்கார் துளியஞ்சி
நல்குர வாற்றப் பெருகினுஞ் செய்யாரே
தொல்வரவிற் றீர்ந்த தொழில். ௫௬

பாழ்மனையுந் தேவ குலனுஞ் சுடுகாடு
மூரில் வழியெழுந்த வொற்றை முதுமரனுந்
தாமே தமியர் புகாஅர் பகல்வளரார்
நோயின்மை வேண்டு பவர் ௫௭

எழுச்சிக்கட் பிற்கூவார் தும்மார் வழுக்கி
மெங்குற்றுச் சேறிரோ வென்னாரே முன்புக்
கெதிர்முகமா நின்று முரையா ரிருசார்வுங்
கொள்வர் குரவர் வலம். ௫௮

உடம்புநன் றென்றுரையா ரூதார் விளக்கு
மடிப்பினுட் டகந்தக் கொள்ளா ரதனைப்
படக்காயார் தம்மேற் குறித்து. ௫௯

யாதொன்று மேறார் செருப்பு வெயின்மறையா
ரான்றவிந்த மூத்த விழுமியார் தம்மோடங்
கோராறு செல்லு மிடத்து. ௬௰

வாழ்முறை யான்வந்த நான்மறை யாளரை
மேன்முறைப் பாற்றங் குரவரைப் போலவொழுக
ஞானமுறை யாளர் துணிவு. ௬௧

கால்வாய்த் தொழுவு சமய மெழுந்திருப்
பாசார மென்ப குரவர்க் கிவையிவை
சாரத்தாற் சொல்லிய மூன்று. ௬௨

துறந்தாரைப் பேணலு நாணலுந் தாங்கற்ற
மறந்துங் குரவர்முற் சொல்லாமை மூன்றுந்
திறங்கண்டார் கண்ட நெறி. ௬௩

பார்ப்பார் தவரே சுமந்தார் பிணிப்பட்டார்
மூத்தா ரிளையார் பசுபெண்டி ரென்றிவர்கட்
காற்ற வழிவிலங்கி னாரே பிறப்பினுட்
போற்றி யெனப்படு வார். ௬௪

ஈன்றாண் மகடன் னுடன்பிறந்தா ளாயினுஞ்
சான்றோர் தமித்து வுறையற்க வைம்புலனுந்
தாங்கற் கரிதாக லான். ௬௫

கடைவிலக்கிற் காயார் கழிகிழமை செய்யார்
கொடையளிக்கட் பொச்சாவார் கோலநேர் செய்யா
ரிடையறுத்துப் *போகிப் பிறனொருவற் சேரார்
கடைபோக வாழ்துமென் பார். ௬௬

---

* போகார் எனவும் பாடம்.

தமக்குற்ற கட்டுரையுந் தம்மிற் பெரிய
ருரைத்ததற் குற்ற வுரையுமஃ தன்றிப்
பிறர்க்குற்ற கட்டுரையுஞ் சொல்லற்க சொல்லின்
வடுக்குற்ற மாகி விடும். ௬௭

பெரியா ருவப்பன தாமுவவா ரில்லந்
சிறியாரைக் கொண்டு புகாஅ—ரறிவறியாப்
பிள்ளையே யாயினு மிழித்துரையார் தம்மோ
டளவளா வில்லா விடத்து. ௬௮

முனிவார் துனியார் முகத்தெதிர் நில்லார்
தனிமை யிடத்துக்கட் டங்கருமஞ் சொல்லா
ரினியவை யாமறிது மென்னார் கசிவின்று
காக்கைவெள் ளென்னு மெனின. ௬௯

உமிவு முயர்ந்துழி யேறலும பாகரும்
வகையி லுரையும் வளர்ச்சியு மைந்தும்
புணரார் பெரியா ரகத்து. ௭௰

இறைவர்முற் செல்வமுங் கல்வியுந் தேசுங்
குணனுங் குலமுடையார் கூறார் பகைவர்போற்
பாரித்துப் பல்காற் பயின்று. ௭௧

பெரியார் மனையகத்துந் தேவ குலத்தும
வணங்கார் குரவரையுங் கண்டா லணங்கொடு
நேர்பெரியார் செல்லு மிடத்து. ௭௨

நகையொடு கொட்டாவி காறிப்புத் தும்ம
லிவையும் பெரியார்முற் செய்யாரே செய்யி
னசையாது நிற்கும் பழி. ௭௩

நின்றக்கா லிருக்க வடங்கிருந்தா லென்று
மிருந்தக்கா லேவாமை யேகார்—பெருந்தக்கார்
சொல்லிற் செவிகொடுத்துக் கேட்டீக மீட்டும்
வினவுக சொல்லொழிந்தக் கால். ௭௪

உடுக்கை யிகவார் செவி*சொறுண்டார் கைமே [லுங்
லெடுத்துரையார் பெண்டிர்மே னோக்கார் செவிச்சொல்
கொள்ளார் பெரியா ரகத்து. ௭௫

விரைந்துரையார் மென்மே லுரையார்பொய் யாய
பரந்துரையார் பாரித் துரையா-ரொருங்கெனைத்துஞ்
சில்லெழுத்தி னாலே பொருளடங்கக் காலத்தாற்
சொல்லுக செவ்வி யறிந்து. ௭௬

தம்மேனி நோக்கார் தலையுளரார் கைந்நொடியா
ரெம்மேனி யாயினு நோக்கார் தலைமகன்
றன்மேனி யல்லாற் பிற. ௭௭

பிறரொடு மந்திரங் கொள்ளா ரிறைவனைச்
சாரார் செவியோரார் சாரிற் பிறிதொன்று
தேர்வார்போ னிற்க திரிந்து. ௭௮

துன்பத்துட் டுன்புற்று வாழ்தலு மின்பத்து
ளின்ப வகையா னொழுகலு—மன்பிற்
செறப்பட்டா ரில்லம் புகாமையிம் மூன்றுந்
திறப்பட்டார் கண்ணே யுள. ௭௯

---

* சுறீண்டார் எனவும் பாடம்.

தெறுவந்துந் தங்குரவர் பேருரையா ரில்லத்
துறுமி நெடிது மிராஅர் பெரியாரை
யென்று முறைகொண்டு கூறார் புலையரையு
நன்கறிவார் கூறார் முறை. அ௰

*புழைக்கடைபு காரரசன் கோட்டி யுரிமை
யிவற்றுக்கட் செவ்வியார் நோக்காரே யவ்வத்
தொழிற்குரிய ரல்லா தவர். அக

வண்ண மகளி ரிடத்தொடு தம்மிட
மொள்ளிய மென்பா ரிடங்கொள்ளார் தெள்ளி
யிகக்கிழமை யுண்டெனினும் வேண்டாவே பெண்டிர்க்
குவப்பன வேறாய் விடும். அஉ

நிரல்படச் செல்லார் நிழன்மிதித்து நில்லா
ருரையிடை யாய்ந்துரையா ரூர்முனிவ செய்யா
ரரசர் படையளவுஞ் சொல்லாரே யென்றுங்
கடைபோக வாழ்துமென் பார். அ௩

அலையுறை பாம்பு மரசு நெருப்பு
முழையுறை சீயமு மென்றிவை நான்கு
மிளைய வெளிய பயின்றனவென் றெண்ணி
யிகழி னிழுக்கந் தரும். அ௪

அறத்தொடு கல்யாண மாள்வினை கூரை
இறப்பப் பெருகியக் கண்ணுந்—திறப்பட்டார்
மன்னரின் மேம்படச் செய்யற்க செய்பவேல்
மன்னிய செல்வங் கெடும். அ௫

*புழைக்கடைப் பின்புகார் கோட்டி எனவும் பாடம்.

உண்டது கேளார் குரவரை மிக்காரைக்
*கண்டெழீக்கண் டாமந் திரியார் புலையரையு
முண்டது கேளார் விடல். ௮௬

கிடந்தாரைக் கால்கழுவார் பூப்பெய்யார் சாந்த
மறந்தானு மென்னானும் பூசார் கிடந்தார்க
†ணில்லாரங் கட்டின் மிசை. ௮௭

உதவிப் பயனுரையா ருண்டி பழியா
ரறத்தொடு தாமோற்ற நோன்பு வியவார்
திறத்துளி வாழ்துமென் பார். ௮௮

எய்தாத வேண்டா ரிரங்கா ரிழந்ததற்குக்
கைவாரா வந்த விடுக்கண் மனமழுங்கார்
மெய்யாய காட்சி யவர். ௮௯

¶தலைக்கிட்ட பூமோவார் மோந்தபூச் சூடார் [றும்
பசுக்கொடுப்பிற் பார்ப்பார்கைக் கொள்ளாரே யென்
புலைக்கெச்சி னீட்டார் விடல். ௯௰

மோட்டுடைப் போர்வையோ டேக்கழுத்தந் தாளசை
காட்டுளே யானும் ‡பழித்தார மாந்தம்மின் [ப்புங்
மூத்த வுளவாக லான். ௯௧

---

* கண்டெழீக் கண்டான் மனந்திரியார் புல்லரையும் எனவும்
† நில்லார்தாங் கட்டின்மிசை எனவும்
¶ தலைக்கிட்ட பூமோவார்.
‡ பழித்தார் மாந்தம்மின் எனவும் பாடம்.

*நிலையைந்த நற்கருமஞ் செய்புங்கா லென்றும்
புலையர்வாய் நாட்கேட்டுச் செய்யார்—தொலைவில்லா
வந்தணர்வாய்ச் சொற்கேட்டுச் செய்க வவர்வாய்ச்சொ
லென்றும் பிழைப்ப தில. ௯௨

மன்றத்து நின்றுஞற்றா ரோசை யுயிர்த்தியங்கா
ரென்றுங் கடுஞ்சொ லுரையா ரிருவராய்
நின்றுழியுஞ் †செல்லார் விடல். ௯௩

கைசுட்டிக் கட்டுரையார் ‡காலா லெழுத்திடார்
மெய்சுட்டி யில்லாரை யுள்ளாரோ டொப்புரையார்
கையிற் குரவர் கொடுப்ப விருந்தேலா
ரையமில் காட்சி யவர். ௯௪

தன்னுடம்பு தார¶மடைக்கலந்தான் தன்னுயிர்க்கென்
றெண்ணித் துவைத்த பொருளோ டிவைநான்கும்
பொன்னினைப் போற்போற்றிக்§காத்துய்க்க வுய்க்கா
மன்னிய வேதந் தரும். [க்கான் ௯௫

நச்செறும்பு நூங்கணாம் புட்காக்கை யென்றிவைபோ
றங்கரும நல்ல கடைப்பிடித்துத் தங்கரும [ற்
மப்பெற்றி யாக முயல்பவர்க் காசார
மெப்பெற்றி யானும் படும். ௯௬

---

* தலைஇய நற்கருமம் எனவும்,
† சொல்லார் விடல,
‡ கானமே லெழுத்திடார் எனவும்,
¶ அடைக்கலந் தன்னுயிர்க்கென், றுன்னி நினைத்த பொருளோ எனவும்,
§ உய்யாக்கா, லன்றே விழுமந் தரும் எனவும் பாடம்.

தொழூஉதானும் வாய்புதைத் தானுமஃ தன்றிப்
பெரியார்முன் யாதும் உரையார் *பழியவர்
கண்ணுளே நோக்கி யுரை. ௯௭

சூதர் கழக மரவ மறுக்களம்
பேதைக ளல்லார் புகாஅர் புகுபவே
லேதம் பலவுந் தரும். ௯௮

†ஊர்க்களத்து மட்டிலும் பெண்டிர்கண் மேலு
நடக்கற்ற கட்டியார் நோக்கா ரெடுத்திசையா
ரில்லம் புகாஅர் விடல் ௯௯

அறியாத தேயத்தா னாதுலன் மூத்தா
னிளையா னுயிரிழந்தா னஞ்சினா னுண்பா
‡னரசர் தொழிற்றலை வைத்தான் மணாளனென்
றொன்பதின்மர் கண்டீ ருரைக்குங்கா §லாற்றவு
மாசாரம் வீடுபெற் றார். ௱

ஆசாரக் கோவை
முற்றிற்று.

---

* வழியவர் எனவும்
† ஊற்களத்தும் எனவும்,
§ அரசர் திறத்த தொழில்வைத்தான் எனவும்,
‡ மெய்யனை வாசாரம் எனவும் பாடம்.